ஞானசீவ
வாதக்
கட்டளை

உ

திருச்சிற்றம்பலம்.

# நாஞசிவவாதுக்கட்டளை.

சேஷாத்திரிசிவதேசிகர்

அருளிச்செய்தது.

இஃது

சரவணபுரம்.

சண்முகமுதலியாரவர்களால்

பார்வையிடப்பட்டு,



புரசைப்பாக்கம்.

ஏழுமலைப்பிள்ளையவர்களது

விவேகவிளக்கஅச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

ஸ்ரீமுக ௵.





திருச்சிற்றம்பலம்.

# நாலுசிவவாதக்கட்டளை.



சுத்தப்பிரமமாகிய சர்வசாக்ஷியினிடத்திலே அக்கினியிற் சூடுபோல அபின்னமாக விருக்கின்ற ஒருசத்தியுண்டு இந்தச்சத்தி அவ்வநீதப் பிரமத்தினிடத்திலே யடங்கியிருக்கும்போது அதற்குச் சுத்தப்பிரம மென்றுபெயர், இந்தச்சத்தி விசிரம்பித்துச் சுத்தப்பிரமத்தை வியாபிக்கும்போது அப்பிரமம் பரா வியாபகத்துக்குள் ளிருந்த படியினாலே யதற்குப் பிரமமென்றுபெயர்.

புருஷ சன்னிதானத்திலே ஸ்திரீக்கு இன்பஞ்சனிக்கிறதுபோலப் பிரமசன்னிதானத்தில் லக்ஷண சூனியமாக விருக்கின்ற அந்தச்சத்தியி னிடத்திலே அதிகிர்த சத்து ரஜஸ் தமோகுணங்க ளுண்டாயின — அந்தச் சுத்தசத்துவத்துக்கு ஆனந்தரூபசத்தி யென்றுபெயர் — சுத்தராஜசுக்குச் சித்ரூப சத்தியென்றுபெயர் — சுத்ததமசுக்குச் சத்ரூப சத்தி யென்றுபெயர் — அப்பரப்பிரமம் காரணமான ஆனந்தரூபசத்தியுடனே கூடிச் சர்வானந்த சுழித்தியைடைப்போது அதற்குப் பரமானந்தனென்றுபெயராம் அந்தபரமானந்தன் சித்ரூபசத்தியுடனே

கூடிச் சர்வப் பிரகாசமென்னுஞ் சொப்பனாவஸ்தையை யடையும் போது—அவர்க்குப் பரமானந்தனென்னும் பெயர்போய்ப் பரிபூரணனென்னும் பெயராம்—அந்தப் பரிபூரணன் சத்ரூப சத்தியுடனேகூடிச் சர்வ வியாபகமென்னுஞ் சாக்கிராவஸ்தையை யடையும்போது அவர்க்குப் பரிபூரணனென்னும்பெயர்போய்ப் பரனென்னும்பெயராம்.

இந்த அகண்ட பரிபூரண சச்சிதானந்த பிரமத்தி னிடத்திலே சத்தியில் இரசதந் தோன்றினாற்போல மூலப்பிர கிருதியென்று மொருசத்தியுண்டாயிற்று—அந்த மூலப்பிரகிருதி விகிர்த சத்துவ ரஜச தமச என்னும் முக்குணங்க ளுடனே கூடியிருக்கும்—அந்தப் பிரகிருதியின் சத்துவ குணத்திற்கு மாயையென்றுஞ் சர்வஜன வுபாதியென்றும் ஈஸ்வரன் காரண சரீரமென்றும்பெயர்—அந்தமாயையினிடத்திலே நிர்மல சலப்பிரதி பிம்பம்போலப்—பிரபஞ்ச லக்ஷணமாகப் பிரதி பிம்பிக்கும் அந்தச் சைதன்னிய பிரதிபிம்பத்துக்குச் சர்வஜனாகிய ஈஸ்வரனென்றுபெயர்.

அந்தச் சத்துவகுண மாயையி னிடத்திலே சத்துவத்திற் சத்துவம் சத்துவத்தில் ரஜச சத்துவத்தில் தமச என்று மூன்று குணங்களுண்டு சத்துவத்திற் சத்துவம் பிரதானமாகும்போது அதிற் பிர

திபிம்பித்த ஈஸ்வரனுக்குச் சகத்தை ரட்சிக்கையி னலே விஷ்ணுவென்று பெயராம்—சத்துவத்தில் ரஜசு பிரதானமாகும் போது அதிற் பிரதிபிம்பித் த ஈஸ்வரனுக்குச் சகத்தைச் சிருஷ்டிக்கையி னலே பிரமனென்று பெயராம்—சத்துவத்தில் தமசு பி ரதானமாகும்போது அதிற் பிரதிபிம்பித்த ஈஸ்வர னுக்குச் சகத்தைச் சங்காரம்பண்ணுகையினல் ருத் திரனென்று பெயராம்—இவையே மூலப் பிரகிரு தியின் சத்துவகுண கற்பனையாம்.

மூலப்பிரகிருதியின் ரஜோகுணம் அனேகரூ பமாய் ஒன்றற்கொன்று தாரதம்ய முள்ளவைகளா யிருக்கும், அவைகளுக்கு அவித்தைகளென்றுஞ் சி வகாரண சரீரங்க ளென்றும் பெயர்—அந்த அவித் தைகளிடத்தில் மலினசலப் பிரதிபிம்பம்போலப் பிரமசைதன்னியம் பிரதிபிம்பிக்கும்—அந்தச் சை தன்னிய பிரதிபிம்பங்களுக்குக் கிஞ்சிஞரென் று—சிதாபாசசீவரென்றும் பெயர்—இந்த அவித் தைகளிடத்தில் ரஜசிற் சத்துவம் ரஜசில் ரஜசு ரஜசி ல் தமசு என்று மூன்றுகுணங்களுண்டு—ரஜசிற்சத் துவம் பிரதானமாகும்போது அதிற் பிரதிபிம்பித் த சிதாபாசர் தத்துவஞான நிஷ்டராவர்—ரஜசில்ர ஜசு பிரதானமாகும்போது அதிற் பிரதி பிம்பித்த சிதாபாசர் காமக்குரோத பரராய்க் கர்மநிஷ்டரா

வர்—ரஜஸில் தமசு பிரதானமாகும் போது அதிற் பிரதிபிம்பித்த சிதாபாசர் சோம்பல் நித்திரை மயக்கங்களை யுடையவராவர்—இவையே மூலப்பிரகிருதியின் ரஜோகுண கற்பனையாம்.

மூலப் பிரகிருதியின் தமோகுணத்தில் ஆவாணம்-விக்ஷேபமென்னும் இரண்டு சத்திகளுண்டு—அவ்விரண்டில் ஆவரணசத்தியானது தத்துவஞானிகளும் ஈஸ்வரனுந்தவிர மற்றச் சீவர்களுக்குச் சரீரத்திரயம் சிதாபாசன்—சாக்ஷி சைதன்னியம் என்பவைகளில் ஒன்றற்கொன்று பேதந் தெரியவொட்டாமல் மறைத்துநிற்கும்—அதனால் மறைக்கப்பட்டிருப்பவன் இருபத்தொன்பது தத்துவங்களையும் நானென்று அபிமானிப்பவன்—அந்த அபிமானத்திற்கு அகங்காரக் கிரந்தியென்றுஞ்—சம்சாரயந்தமென்றும் பெயர்—சற்குரு கடாக்ஷத்தினால் அந்த ஆவாணநீங்கி இருபத்தொன்பது தத்துவங்களையுந் தானன்றென்று அறிகிறதேமுத்தி இவையே ஆவரணசத்தியின் காரியமாம்.

விக்ஷேப சத்தியினிடத்திற் சப்ததன்மாத்திரையான ஆகாசந்தோன்றிற்று ஆகாசத்திற்பரிசதன்மாத்திரையான வாயுதோன்றிற்று—வாயுவில் ரூபதன்மாத்திரையான அக்கினி தோன்றிற்று—அக்கினியில் ரஸ தன்மாத்திரையான அப்பு தோன்றிற்று—அ

ப்புவில் கந்ததன்மாத்திரையான பிருதுவி தோன்றிற்று—அந்தச் சூட்சும பஞ்சபூதத்திற்குக் காரணமாக விருக்கின்ற விக்ஷேப சத்தியினிடத்திலே தமஸில் சத்துவம்-தமஸில்-ரஜஸ-தமஸில்-தமசு - என்று மூக்குணங்களும் அடங்கியிருக்கிற படியினாலே அதன்காரியமான அந்தப்பஞ்சபூதங்களும் அம்முக்குணங்களுடனே தோன்றின, அந்தப்பஞ்சபூதங்களுக்குத் தன்மாத்திரைகளென்றும், அபஞ்சிகிருத பூதங்களென்றும்—சூக்ஷ்மபூதங்களென்றும் பெயர்.

இவைகளிடத்தில் சூக்ஷ்மசரீரங்களும் ஸ்தூலபூதங்களுந் தோன்றும்—எங்ஙனமெனின் ஆகாசமுதலான பஞ்சபூதங்களின் சத்துவாம்சத்திலே ஒவ்வொரு பூதத்தி லொவ்வொரு மாத்திரைகள் ஒன்றுகச்சேர்ந்து அந்தக்கரண மூண்டாயிற்று—அந்த அந்தக்கரணத்தில் ஆகாசத்தினம்சங்கூடி யதற்கடையாளம் அந்த அந்தக்கரணமும் ஆகாசத்தைப்போலச் சகலசத்தத்திற்கு மிடங்கொடுத்துத் தரிக்கின்றதேயாம்—அப்படித் தரிக்கின்ற விருத்திக்கு உள்ளமென்று பெயர்—அந்த அந்தக்கரணத்தில் வாயுவினம்சங் கூடியதற் கடையாளம்—அந்த அந்தக்கரணமும் வாயுவைப்போல் அலைகின்றதேயாம்—அப்படி யலைகின்ற விருத்திக்கு மனமென்று பெயர்—அந்த அந்தக்கரணத்தில் அக்கினியினம்சங்கூடி

யதற் கடையாளம் அந்த அந்தக்கரணம் அக்கினி யைப்போல இதுவிதுவென்று விளக்கு விக்கின்ற தேயாம்—அப்படி விளக்குவிக்கின்ற விருத்திக்குப் புத்தியென்று பெயர்—அந்த அந்தக்கரணத்தில் அப்புவினம்சங் கூடியதற் கடையாளம் அந்த அந்தக்கரணம் அப்புவைப்போல—விஷயங்களைப் பற்றச்செல்லுகின்றதேயாம்—அப்படிச் செல்லுகின்ற விருத்திக்குச் சித்தமென்றுபெயர்—அந்த அந்தக்கரணத்திற் பிருதுவியினம்சங் கூடியதற் கடையாளம் அந்த அந்தக்கரணம் பிருதுவியைப்போலக் கடினமாகநின்று நானென்று அபிமானிக்கின்றதேயாம் அந்தவிருத்திக்கு அகங்காரமென்றுபெயர்—இப்பஞ்சபூதங்களினுடைய சத்துவாம்சத்திலே ஒவ்வொருபூதத்தின் ஒவ்வொரு மாத்திரைகள் தனித்தனியே சூக்ஷுமாத்திரஞானேந்திரியங்களாயின—சுரோத்திரம் ஆகாசத்தினம்சமானபடியிருந்தே ஆகாசத்தின் குணமான சப்தத்தைமாத்திரம் அறியும்—துவக்கு வாயுவினம்சமானபடியிருந்தே வாயுவின்குணமான பரிசத்தைமாத்திரம் அறியும் சட்சு அக்கினியினம்சமானபடியிருந்தே அக்கினியின் குணமான ரூபத்தைமாத்திரம் அறியும் சிங்ஙுவை அப்புவினம்சமானபடியிருந்தே அப்புவின் குணமான ரசத்தைமாத்திரம் அறியும் கிராணம் பிருதுவியினம்சமானப

டியினாலே பிருதுவியின் குணமான கந்தத்தைமா த்திரம் அறியும், இப்படி யிவைகள் ஒன்றுடனொன்றுகூடாமல் தனித்தனியா யுண்டாயிருக்கிற படியினாலே ஒன்றுமற் றொன்றின்குணத்தை அறியமாட்டாது இவ்வைந்து பூதங்களின் ஐந்துமாத்திரைகளும் ஒன்றாகக்கூடியது அந்தக்காரணமாதலால் ஐந்திந்திரியங்களிலுஞ்சேர்ந்து ஐந்துவிஷயங்களையுமறியும் அந்தச்சத்துவகுணத்திலுண்டான அந்தக்கரணமைந்தும் ஞானேந்திரிய மைந்தும் ஆகியபத்துஞ்சத்துவாம்சமானபடியினாலே ஞானசாதனமாயின

இவ்வைந்து பூதங்களினுடைய ரஜோம்சத்திலே ஒவ்வொரு பூததின் ஒவ்வொரு மாத்திரைக ளொன்றாகச்சேர்ந்து வியானாதி பஞ்சவாயுக்களுண்டாயின இவையில் வியானவாயு—ஆகாசத்தினம்சமானபடியினாலே ஆகாசத்தைப் போலச் சர்வாங்கமும் வியாபித்திருக்கும் பிராணவாயு வாயுவினம்சமானபடியினாலே—வாயுவைப்போல் இருதயத்திலிருந்து நாசிவரையிலுமலையும் அபானவாயு அக்கினியினம்சமானபடியினாலே அக்கினியைப்போலச் சாடராக்கினியாய் உஷ்ணத்தைச்செய்து புசித்ததைப்பற்றின்று அன்னபானாதிகளைச் சீரணிப்பிக்கும்சமானவாயு அப்புவினம்சமானபடியினாலே சரீரமெங்குநாடிஸ்தானத்தினின்று அன்னபானாதிகளைச் சகல

நாடிகளிலும் அப்புவைப்போல இழுத்துக்கொண்டுசெல்லும் உதானவாயு பிருதிவியினம்சமானபடியினாலே கண்ட ஸ்தானத்தினின்று பிருதிவியைப்போல வர்த்தித்திருக்கும் இந்தப்பஞ்சவாயுக்களுமல்லாமல்வாயிலிருந்து வாந்திபண்ணுவிக்கின்றது நாகனென்றும் நேத்திரத்திலிருந்து விழிப்பிக்கின்றது கூர்மனென்றும் மூக்கிலிருந்து குருகுருத்துத்தும்மச்செய்கின்றது கிரிகரனென்றும் கொட்டாவிகொள்ளச்செய்கின்றது தேவதத்தனென்றும் வீங்கச்செய்கின்றது தனஞ்சயனென்றுஞ் சொல்லப்பட்டஐந்துவாயுக்களுண்டென்றுஞ் சிலர்சொல்வார்கள் இவையைந்தும் பிராணவாயுவினுடைய தொழிலாயிருக்கின்றமையால் வேறல்லவென்று அறிக.

ஆகாசமுதலான பஞ்சபூதங்களினுடைய ரசோம்சத்திலே ஒவ்வொரு பூதத்தி லொவ்வொருமாத்திரைகள் தனித்தனியே வாக்காதிகர்மேந்திரியங்களாயின இவைகளில் ஆகாசத்தினிடமாக வாக்குவசனிக்கும் வாயுவினிடமாகப் பாணியீதலுமேற்றலுஞ்செய்யும் அக்கினியினிடமாகப் பாதநடக்கும் அப்புவியினிடமாகப் பாயுமலசலாதிகளை வெளியிலேதள்ளும் பிருதிவியினிடமாக உபஸ்தம் ஆனந்திப்பிக்கும் இவைகளைந்தும் தனித்தனியாயுண்டாயிருக்கிறபடியால் ஒன்று மற்றொன்றின் தொழிலைச்செய்ய

மாட்டாது வியாநுதி வாயுக்களைந்தும் அப்பூதங்க
ளின்மாத்திரைகளொன்றுக்கூடியுண்டாயிருக்கின்
றமையாலக்கர்மேந்திரியம் ஐந்திற்கிடமாகவுஞ்சென்
று அவற்றின் ஐந்துதொழிலையுஞ் செய்விக்கும் இ
வ்வாயுக்களைந்துங் கர்மேந்திரியங்களைந்தும் ஆகியப
த்துமாராஜசமானபடியினாலே விபரீதசாதனமா
யின இந்தஇருபத்தைந்துஞ் சூக்ஷுமசரீரமென்
று சொல்லப்படும் இச்சூக்ஷுமசரீரத்தை மாயாப்
பிரதிபிம்பமாகிய ஈஸ்வரன் அவித்தையாப்பிரதிபிம்
பமாகிய சீவர்களனேகராகையால் ஒவ்வொருவருக்
கு ஒவ்வொரு சரீரமாகச்சிருஷ்டித்து அளித்தார் இ
ப்படி பஞ்சபூதத்தினுடைய சத்துவாம்சமும் ரஜோ
ம்சமுஞ் சேர்ந்தன தமோம்சத்திற்கின்றது இதுவேசூ
க்ஷுமசரீரகற்பனையாம்.

இப்படிச்சேஷித்துநின்ற தமோம்சமான சூட்சு
மபஞ்சபூதத்தினிடத்தில் ஸ்தூலபூதங்களும் ஸ்தூல
தேகங்களுந் தோன்றும் எப்படியென்றால் தமோம்
சமாயிருக்கின்ற இந்தஐந்து பூதங்களும் ஒவ்வொன்
று இரண்டிரண்டாகி முதற்பாதியைந்தும் ஒவ்வொ
ன்று நான்காகி இரண்டாம்பாதியைந்தில் தன்னமி
சம்விட்டு மற்றநான்கு பூதத்தினுடனும் அரைக்கா
ல் அரைக்கால் மாத்திரையாகச்சேர்ந்து பஞ்சீகரண
மாயின இப்படிப்பஞ்சீகரணமான ஸ்தூலபூதங்களு

ன் ஆகாசத்திலே பரிசரூப ரசகந்தமாகிய நான்குகு ணமும் வியாப்பியமானபடியினாலே அதிருசியமா யனிற்கனிசகுணமாகிய சப்தந் திருசியமாய்த் தோ ன்றினிற்கும் வாயுவிலே ரூபரசகந்தமாகிய மூன்று குணமும் வியாப்பியமான படியினாலே அதிருசிய மாய்னிற்கக்காரணகுணமாகிய சப்தமூனிசகுணமா கியபரிசமுந் திருசியமாகத்தோன்றினிற்கும் அக்கி னியிலே ரசகந்தமாகிய இரண்டுகுணமும் வியாப்பி யமானபடியினாலே அதிருசியமாய்னிற்கக் காரண குணங்களாகியசத்தபரிசமுனிசகுணமாகியரூபமு ந்திருசியமாய்த்தோன்றினிற்கும் அப்புவியிலேகந் தகுணம்வியாப்பியமானபடியினாலே அதிருசியமா ய்னிற்கக் காரணகுணங்களாகிய சப்தபரிசரூபமும் னிசகுணமாகியரசமுந் திருசியமாய்த் தோன்றினி ற்கும் பிருதுவியிலே காரணகுணங்களாகிய சப்தப ரிசரூபரசமும் னிசகுணமாகிய கந்தமுந்திருசிய மாகத்தோன்றினிற்கும் சூக்ஷமபூதத்திலிருந்து சூ க்ஷமசரீரந் தோன்றினது போலப் பஞ்சீகரித்தஸ் தூலபூதத்தினின்றும் ஆறுதத்துவமாய் நால்வகைத் தோற்றமாய் எழுவகைச்சாதியாய் ஸ்தூலசரீரங்கள் தோன்றின.

ஆறுதத்துவங்களாவன-சர்மம்-உதிரம்-மாம்ச ம்-நரம்பு-அஸ்தி-மச்சை - இவைகளாம் நால்வகைத்

தோற்றங்களாவன - சராயுஜம்- அண்டஜம்-சுவேதஜம்-உற்பீஜம்-இவைகளாம் மூவகைச்சாதிகளாவன இகலோகபுத்தி-பரலோகபுத்தியென்று மிரண்டையமுடையமனிதர்கள் உத்தமசாதி பரலோகபுத்தியின்றி இகலோகபுத்திமாத்திரமுடைய பசுபட்சிமுதலானதிரியக்குகள்மத்திமசாதி இவ்விருவகைப்புத்தியுமில்லாதவைகளாயிருக்கின்ற விருட்சாதிகள் அதமசாதிஇவைகளாம் பிருதுவிதத்துவமாயிருக்கின்ற பூலோகத்திலே இந்தமூன்று சாதியு மிருக்கின்றனபோல-அப்பு-அக்கினி-வாயு- ஆகாசமென்னப்பட்டதத்துவங்களா யிருக்கின்ற பிதிர்லோகந் தேவலோகங்கந்தர்வலோகஞ் சித்தலோகங்களிலேயுமுண்டாயிருக்கின்றன அங்கே சந்திரன்முதலான பிதிர்கள் சூரியன்முதலான தேவர்கள் கந்தர்வர் சித்தர்முதலானவர்கள் உத்தமசாதி காமதேனு ஐராவதம் கருடன் இவைகள் மத்திமசாதி கற்பகவிருட்சம் முதலான இவைகள் மத்திமசாதி.

அன்னமயம்-பிராணமயம்-மனோமயம்-விஞ்ஞானமயம்- ஆனந்தமயம்-என்று ஐந்து கோசங்களில்இந்தஸ்தூலசரீரம் அன்னமயகோசமாம்சூக்ஷமசரீரம்-பிராணமயகோசம் - மனோமயகோசம்-விஞ்ஞானமயகோசமென்று மூன்றுகோசங்களாம் அவையாவன பிராணவாயுவுங் கர்மேந்திரியமுந்

கூடியது பிராணமயகோசம் மனதுங்கர்மேந்திரிய மூங் கூடியது மனோமயகோசம் புத்தியு ஞானேந்திரியமுங்கூடியது விஞ்ஞானமயகோசம் காரணசரீரமானந்த மயகோசமாம் ஆறுதத்துவமாயிருக்கின்றஸ்தூலசரீரத்திலே சூட்சமசரீரத்துவமிருக்கின்றதெப்படி யென்றால் கர்மேந்திரியத்தில் வாக்கும் ஞானேந்திரியத்தில்சிக்குவையும்வாயிலிருக்கும் உதானவாயுவு மனதுங்கண்டத்திலே யிருக்கும் பிராணவாயுவும் புத்தியும் இருதயத்திலிருக்கும் சமானவாயுவுஞ்சித்தமும் நாபியிலிருக்கும் அபானவாயுவும் பாயுவுங் குதத்திலிருக்கும் வியானவாயுவும் ஞானேந்திரியத்திலே துவக்கும் அகங்காரமுஞ் சர்வாங்கமும் வியாபித்திருக்கும் உச்சியிலே உள்ளமும் கருவிழிநுனியிலே சக்ஷு இந்திரியமும் காதிற்குள்ளே சோத்திரேந்திரியமும்மூக்குநுனியில் கிராணேந்திரியமும் ஆகிய இவைகள் கண்டத்திற்கு மேலே தனித்தனியே யிருக்கும் கண்டத்திற்குக் கீழே கைகால்குய்யங்களில் பாணிபாதம் உபஸ்தமென்னு மிந்திரியங்கள் தனித்தனியே யிருக்கும் இப்படி ஸ்தூலசரீரத்துவம் ஆறும் அதிற்குடிபுகுந்தசூக்ஷமசரீரத்துவமிருபதும் ஆகிய தத்துவமிருபத்தாறும்பஞ்சபூதத்தின் காரியமானபடியினாலே இவைகளினாலாகிய ஸ்தூல சூக்ஷமசரீரங்கள் காரியசரீரமென்று

சொல்லப்படும்.

அவித்தையிற் பிரதிபிம்பித்த சிதாபாசன் சாக்கி
த்திலே இந்தயிருபத்தாறு தத்துவத்துடனே கல
துநிற்றபோது விஸ்வனென்றும் வியவகாரிக சீவ
னென்றுஞ் சொல்லப்படும் ஸ்தூலசரீரத்தைவிட்டு
ச்சொப்பனத்திலே யந்தக்கரணத்துடனேகூடி நி
ற்றபோது தைசதனென்றும் பிராதிபாசிகசீவனெ
ன்றுஞ்சொப்பனகற்பிதனென்றுஞ்சொல்லப்படும்
சுழுத்தியிலே காரியசரீரத்துவந்த விருபத்தாறை
யும்விட்டுக் காரணசரீரத்தை மாத்திரம் பொருந்தி
யிருக்கும்போது பிராஞ்ஞனென்றும் பாரமார்த்தி
கசிவனென்றும் சொல்லப்படும் பிரமைசதன்னிட
ம் சாக்கிரத்துக்குச் சாட்சியாயிருக்கும்போது சிவ
த்மாவென்றுஞ் சொப்பனத்துக்குச் சாட்சியாயிரு
க்கும்போது அந்தராத்மாவென்றுஞ் சுழுத்திக்குஞ்
சாட்சியாயிருக்கும்போது பரமாத்மாவென்றும் அ
வஸ்தாத்திரய சாட்சியா யிருக்கும்போது ஞானா
மாவென்றுங் கூடஸ்தனென்றுஞ் சொல்லப்படு
சிவனுக்குமூன்றவஸ்தையும் மூன்றுசரீரமுஞ் சொ
ல்லப்பட்டன.

கற்பிதபிரபஞ்ச வடிவமாகத் தோன்றுகின்ற வி
தாலபஞ்சபூதங்களும் அப்பூதங்களிலே தோன்றி
மூன்றுகாரியா யிருக்கின்ற ஸ்தூலசரீர சமஷ்டியுப்

ஈஸ்வரன். ஸ்தூல சரீரமென்றும் விராட்டென்றுஞ் சொல்லப்படும் இவற்றுடனே கூடிச் சாக்கிர அவஸ்தையைப் பொருந்துகின்ற ஈஸ்வரன் வைஸ்வாநரனென்றும் இவற்றிற்கு அதிஷ்டான சைதன்னியம் பிரமனென்றுஞ் சொல்லப்படும் சூக்ஷமபூதங்களாந் தும் அப்பூதங்களிலே மேலான சூக்ஷமசரீரசமஷ்டியும் ஈஸ்வரன் சூக்ஷமசரீரமென்றும் இரணியகர்ப்பமென்றுஞ் சொல்லப்படும் இவற்றுடனே கூடிச் சொப்பனவஸ்தையைப் பொருந்துகின்ற ஈஸ்வரன் சூத்ரதமாவென்றும் இவற்றிற்கு அதிஷ்டான சைதன்னியம் விஷ்ணுவென்றுஞ் சொல்லப்படும் இந்தஸ்தூலசூக்ஷமமிரண்டின் வாசனையுடனே கூடியிருக்கின்ற மாயை ஈஸ்வரன் காரண சரீரமென்றும் அவ்வியாகிருதமென்றுஞ் சொல்லப்படும் இதனுடனே கூடிச்சுழுத்தி யவஸ்தையைப் பொருந்துகின்ற ஈஸ்வரன் அந்தரியாமியென்றும் இவற்றிற்கு அதிஷ்டான சைதன்னியம் ருத்திரனென்றுஞ் சொல்லப்படும் இவையே ஈஸ்வரனுக்கு மூன்றுசரீரமும் மூன்றவஸ்தையுமாம்.

சிவன் தன் மூன்றவஸ்தையிலுந் தன் மூன்றுசரீரமாயிருக்கின்ற இருபத்தேழுதத்துவங்களுடனும் நானென்றுகலந்து நிற்பதுபோல ஈஸ்வரனுந் தன் மூன்றவஸ்தையிலுந் தன் மூன்று சரீரமாயிருக்கின்ற

முப்பத்திரண்டு தத்துவத்துடனுங் கலந்துநிற்பன் ஆயினுஞ்சிதாபாசசீவன் தன்சரீரமாத்திரமே கலந்துநிற்பன்ஈஸ்வரன்தன்சரீரமாகிய சகலசரீரங்களோடுஞ் சகல பிரபஞ்சங்களோடுங் கலந்து நிற்பன் இவ்விரண்டிற்குஞ் சாட்சியா யிருக்கின்ற பிரமசைதன்னியஞ் சகலசரீரத்திலுஞ் சகலபிரபஞ்சத்திலும் நிறைந்து அப்பாலும் அக்கிரமித்து எல்லையற்றிருக்கும்.

சீவனுக்கு ஸ்தூலசரீரவியவகாரத்திற்குத் தத்துவங்கள் அன்னமயமான சட்கோசதத்துவம்-௯-சூக்ஷம சரீரதத்துவம்-௰௨-சீவன் ஈஸ்வரன் அவித்தை வித்தைபிரமம்-௫-ஆக-௬௯-ஆம்-சூக்ஷமசரீரவியவகாரத்திற்குத் தத்துவங்கள் சூக்ஷம சரீரதத்துவம் ௨௰-சீவன்ஈஸ்வரன் அவித்தைவித்தைபிரமம்-௫-ஆக ௨௫-ஆம்-காரணசரீர வியவகாரத்திற்குத் தத்துவங்கள் சீவன் ஈஸ்வரன் அவித்தை வித்தை பிரமம்-ஆக ௫-ஆம்-சீவவியவகாரத்திற்குச் சீவன் ஈஸ்வரன் பிரமம்-ஆக-௩-ஆம்-சாட்சிவியவகாரத்திற்குக் கூடஸ்தர்-௧-ஆம்-ஈசுரனுக்கு ஸ்தூலசரீரவியவகாரத்திற்குத் தத்துவங்கள் சமஷ்டி அன்னமயகோசதத்துவம்-௯-சமஷ்டிசூக்ஷம சரீரதத்துவம்-௨௰-சமஷ்டிசீவன் அவித்தை ௨-ஈஸ்வரனவித்தை பிரமம்-௩-ஸ்தூலபூதம்-௫-ஆக-௩௯-ஆம்-சூக்ஷமசரீர விய

வயிருபதுங்கைந்தை அட்பூதங்களினுடையசத்வகு ணை ரஜோகுணங்களிலே யொடுங்கியிருக்கும் எங்ஙன மெனின் சகலபிராணிகளிடத்திலுமிருக்கின்ற அகங் காரமுங்கிராணேந்திரியமும் உதானவாயுவும் உபஸ் தேந்திரியமும் பிருதுவியிலொடுங்கும்சித்தமுஞ்சி குவையுஞ் சமானவாயுவும் பாதமும் அப்புவிலொடு ங்கும் புத்தியும்சட்சுவும் அபானவாயுவும்பாதேந்தி ரியமும் அக்கினியிலொடுங்கும் மனதுந்துவக்கும் பிராணவாயுவும்பாணிந்திரியமும்வாயுவிலொடுங்கு ம் உள்ளமுஞ்சுரோத்திரமும் வியானவாயுவும் வாக் கும் ஆகாசத்திலொடுங்கும் அப்போது அவைகள் பழையபடியே முக்குணங்களையுடையசூட்சமபூத ங்களாகும் இந்தச்சூட்சம்பூதங்களும் பிருதுவிஅப் புவிலே கரைந்தொழிக்கும் அப்பு அக்கினியிலே சு வறியொடுங்கும் அக்கினி விளக்குப்போல வாயுவி லே அணைந்தொடுங்கும் வாயுவும் ஆகாசத்திலே ஒய்ந் தொடுங்கும் ஆகாசமும்விக்ஷேபசத்தியி லொடுங்கு ம் ஆவரணசத்தியும் விக்ஷேபசத்தியுமூலப்பிரகிருதி யிலத்தமோகுணமாத்திரமாய் ஆலமரம்அதன்விதை யிலொடுங்கியிருத்தல்போல பற்றொரு கிருஷ்டிக் குவித்தாகமாயையிலும் அவித்தையிலு மொடுங்கு ம்இந்தமாயையும் அவித்தையும் அதிசூட்சமமான மூலப்பிரகிருதியென்று சொல்லப்பட்ட விந்துதத்

துவத்திலேயிருக்கும் அந்தவித்துவும் பிராந்தியாய்த்தோன்றியிருந்த பாம்புபோய்க் கயிறாய்க்காணப்படுவதுபோலத் தனக்கு அதிஷ்டான சைதந்நியமான பிரமசைதந்நியமாத்திரமாகவே காணப்படும்படி அதிலே ஒடுங்கிநிற்கும். இப்படி பொய்யாகத் தோன்றப் பட்டவைகளெல்லா மெய்ப்பொருளொன்றாகக்கண்டு அதுவே நிசமாக யிருக்கின்ற தன்வடிவமாகத் தெளிந்து கைவிட்டிருக்கின்றவனே சீவன் முத்தன் இவையே தத்துவங்களினொடுக்கமாம்.

இப்படித்தோற்றிப்போடுக்கின தத்துவம்-௯௬-ஆம் அவையாவன பூதம் -௫- ஸ்தூலசரீரத்துவம்-௪-சூக்ஷமசரீரத்துவம்-௨௰-காரணசரீரமான அவித்தைவித்தை-௨-இவற்றிற்பிரதிபிம்பித்த சீவனீஸ்வரன்-௨-இவற்றிற்கெல்லாம் அதிஷ்டானமாகவிருக்கின்றபிரமம்-௧-ஆக-௯௬-ஆம் இவற்றிலே சீவனுக்குச்சமூகாய பூதம்-௫ மாயை-௧-மாயாப்பிரதி பிம்பவீஸ்வரன்-௧-பிரமம் -௧- ஆகியவெட்டினையுஞ் சீவர்கள் சமூகாயமாக அனுபவிப்பார்கள்மற்றவிருபத்தெட்டினையுந் தனித்தனியாக அனுபவிப்பார்கள் எங்ஙனமெனின் பிருதிவிநசிக்கின் சகலபிராணிகளுக்கும் ஆதாரமில்லையாம் அப்பில்லாவிடினெல்லாருக்குந் தீர்ந்து பதஞ்செய்தலில்லையாம் தேயு

வில்லாவிடிற் பாசமில்லையாம் செயலில்லாவிடில் எல்லாருக்கும் படைப்பெயர்ச்சியில்லையாம் ஆகாசமிறக்கின் ஒருவருக்கும் அவகாசமில்லையாம் மாயையும் மாயைப்பிரதிபிம்பமு மில்லாவிடின் சகலசமயங்களுக்குந் தெய்வமில்லையாம் பிரமமில்லையாயின் ஒருவருக்கும் அறிவில்லையாம் ஆகையால் இந்தவெட்டும் எல்லாருக்குஞ் சமுதாயங்களாய்மற்றவை தனித்தனியனுபவிக்கப்படுவ தெங்ஙனமெனின் ஒருவனுக்கு ஸ்தூலசரீரமிறக்கின் எல்லாருக்கும் ஸ்தூலசரீரமிறவாமையினாலும் சூக்ஷமசரீரத்தி லொருவனுக்கு அங்கவைகல்லியம் உண்டானால் எல்லாருக்கும் அங்கவைகல்லியம் உண்டாகாமையினாலும் முத்தராயிருக்கின்றசுகர்வாமதேவர் முதலானவர்களுக்கு அவித்தையுஞ்சீவனும் நசித்திருக்க மற்றவர்களுக்கு அவித்தையுஞ்சீவனும் நசியாமையாலும் இந்தவிருபத்தெட்டுத்தத்துவங்களையுஞ் சீவர்கள் தனித்தனியே அனுபவிப்பார்கள் என்பதற்குச் சந்தேகமில்லை.

இந்தத்தத்துவம் முப்பத்தாறில் எப்பொழுதுந் தாரகமாய் விளங்குவது-க-எப்பொழுதுந் தமக்கன்னியமாகக் காணப்படுகின்றவைகள்-எ-தானாகவுந் தனக்கன்னியமாகவும் அனுபவிக்கப்படுகின்றவைகள்-உஅ-இங்ஙனமெனின் அவஸ்தாத்திரயசாட்சியாயிருக்கின்ற பிரமசைதன்னியம் எல்லா அவஸ்தையிலுந்

என்றுடைமை என்பதுபோல என்கண் என்காது
என்மூக்கு என்நாக்கு என்கை என்கால் என்புத்தியெ
னகங்காரம் என்சித்தம் என்பிராணனென்று தனக்
கன்னியமாகவும் வழங்கப்படுகின்றமையாலுங் கார
ணசரீரத்திலுமாகிய அஞ்ஞானருஞ் சிதாபாசனும்
நானறியேனறியேனென்று தானாகவும் என்னஞ்ஞா
னம்என்சீவனென்று தனக்கு அன்னியமாகவும் வழ
ங்கப் படுகின்றமையாலும் இந்தவிருபத்தெட்டுத
த்துவங்களுந் தானாகவுந் தனக்கன்னிய மாகவும் அ
நுபவிக்கப் படுகின்றவைகளாம்.

இப்படிச்சொல்லிய குருவைப்பார்த்துச் சீஷன்
இந்தவிருபத்தெட்டுத் தத்துவங்களுந் தானாகவிருந்
தாற் சாட்சியைப்போல ஒருதன்மையாகத் தோன்
றவேண்டுமேயல்லாமல் ஈஸ்வரன் மாயை பஞ்சபூ
தம் என்பவைகளைப்போலத் தனக்கன்னியமாக வழ
ங்கப்பட வேண்டுவதில்லையே அல்லது இந்தவிருப
த்தெட்டுந் தனக்கன்னியமாக விருந்தா லெப்போ
துப் அன்னியமாகவே வழங்கப்படவேண்டுமேயல்
லாமல் தானாக வழங்கப்பட வேண்டுவதில்லையே இ
வைகள் இப்படித்தானாகவுந் தனக்கன்னிய மாகவும்
வழங்கப்படுமென்பது இருட்டாதித்தனென்பது
போல் விருத்தமாகவிருக்கின்றதேயென்று கேட்குஞ்
சீஷனுக்குக் குரு பரமார்த்திகமாகத் தானென்ப

ஐ ஒருவனை அத்தியாசமாகத் தானென்பது ஒருவ
னை இப்படி இருவகையுண்டு சாட்சிசைதன்னியத்
தைத் தானென்பது பாரமார்த்திகமேயல்லாமலு
பசாரமென்று தனக்கன்னியமாக விருக்கின்ற இந்த
விருபத்தெட்டையுந் தானெனில்குரியமகனெ
ன்றுங் கயிற்றைப்பரவென்று மறிதல்போல மயக்க
வேயன்றியுண்மையன்று ஆகையால் அஞ்ஞான
சித்துந்தா னல்லவென்று அறியப்பட்ட தத்துவ
௭-ம் - இப்படிப்பட்ட விவேகமடைந்துபின்பு
னல்லவென்று அறியப்பட்ட தத்துவம்-௨௮-ம் - ஆ
ய முப்பத்தைந்து தத்துவங்களையும் அவற்றின்
னைக்கருவிகளுடனே அறிகின்ற அறிவேகடத்தைப்பா
ர்க்கின்றவன் அதற்கு அன்னியமாகவே யிருந்து
தைப்பார்க்கின்றதுபோல அவற்றிற்கு அன்னி
யமிருந்து அவற்றையறிகின்றவனென்றும் அது
ப்பத்தாருந்தத்துவமாகிய தானென்றும் அது
வேமென்றுஞ் சலக்கமறத் தெளிந்தவனே சிவன்முத்
தன் இப்படிப்பிரமமே தானென்றும் இந்த முப்ப
த்தைந்து தத்துவமுந் தனக்கன்னியமென்றும் ப
குத்தறியாத அவிவேகி அகங்காரக் கிரந்தியினாலேபு
த்திர களத்திராதிகளுக்கு உண்டான துக்கத்தைத் த
ன்னுடைய துக்கமாகக்கொள்ளுகின்றது போல இ
ந்த விருபத்தெட்டுத் தத்துவங்களினுடைய தொழி

வையுந்தனது தொழிலென்று மயங்கிக்கொள்ளுகின்றமையினால் இந்த இருபத்தெட்டினாலும் ஆர்ச்சிக்கப்பட்ட புண்ணியபாவங்களிற் கட்டுண்டு அந்தக் [illegible]வினையின் ஜனனமரணாதி சம்சாரத்திலே அகப்படுகிறவன் பிரமமை அன்னியமே தானென்றிந்த-௨௫-தத்துவங்களுந் தானல்லவென்றுந் தெளிந்து அகங்காரகிரந்தியற்றவனாயும் இவிருபத்தெட்டினுடைய தொழில்களுந் தன்னுடைய தொழில்களல்லவென்றும் இந்தவிருபத்தெட்டாலும் புசிக்கப்பட்டவைகள் தன்னாலேபுசிக்கப்பட்டவைகளல்லவென்றும் நிச்சயமாகத் தெளிந்து பக்ஷமற்றவனாயும் இந்தவிருபத்தெட்டினாலும் ஆர்ச்சிக்கப்பட்ட புண்ணியபாவங்களினின்று நீங்கிக் கர்மபந்த மற்றவனாயு மிருக்கிறபடியினாலே ஜனனமரணாதிசம்சாரமில்லாமல் முத்தனாகிப் பிரமமாத்திரமாகவே யிருப்பன் இவனைச் சீவன் முத்தனென்றுரைத்திடப் பிரஞ்ஞனென்றும்-௨-நிவர்த்தாச் சிரமியென்றும் சுருதிகளென்றும் ஆகமசாஸ்திரங்களுஞ் சொல்லுகின்றன சகலருமிந்தத் தத்துவங்களைவிசாரணைசெய்து மோட்சமடையக் கடவார்கள்.

நாலுசிவவாதக்கட்டளை-முற்றிற்று.

---

